19th August 1961]

பரங்கிப்பேட்டை, அதிராம்பட்டினம், பாம்பன், தனுஷ்கோடி, கீழக்கரை, தொண்டி, கொளச்சல், குலசேகரப்பட்டினம் துறை முகங்கள் பற்றி அரசாங்கம் முக்கியமாகக் கவனம் செலுத்தி வருகிறது. கடலூர்—நாகப்பட்டினம் ஒரு இன்டர்மீடியெட் கோர்ஸ். அதற்கும் முக்கியத்துவம் கொடுத்திருக்கிறோம். இப்பொழுதிருக்கும் நிலைமையில், அதிராம்பட்டினம் துறைமுகம் ரொம்ப நாளாகத் தூர்ந்துபோயிருக்கிறது ; எந்தவிதமான போக்குவரத்தும் கிடையாது. அதை எடுத்துக்கொள்வதா, வேண்டாமா என்பதைப் பரிசீலனை செய்ததில் சரியான முடிவு இல்லை என்பதைக் கனம் அங்கத்தினருக்குத் தெரிவித்துக் கொள்கிறேன்.

*Bridge across Vaigai*

SRI N. R. THIAGARAJAN : கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

மதுரை ஜில்லா, திண்டுக்கல் ஹைவேஸ் டிவிஷன், வத்தலக்குண்டு, ராமிநாயக்கன்பட்டி, காமாக்ஷிபுரம் அருகே வைகையில் ஒரு புதுப்பாலம் கட்டத் திட்டமிருக்கிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The proposals are under the consideration of the Highways Department.

*Arooran Sugar Factory*

* 1263 *Q*.—SRI V. K. KOTHANDARAMAN : கனம் கைத்தொழில் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) தஞ்சாவூர் மாவட்டம், வடபாதிமங்கலத்திலுள்ள ஆரூரான் சர்க்கரை ஆலைத் தொழிலாளருக்கும் நிர்வாகத்தாருக்கு மிடையே ஏற்பட்ட தகராறு சம்பந்தமாக தஞ்சாவூர் நல்லுறவு அதிகாரியிடமிருந்து அறிக்கை ஏதேனும் அரசினருக்கு வந்துள்ளதா ?

(இ) அப்படியானால், அதன் மீது எடுத்துக்கொண்ட நடவடிக்கை என்ன ?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) Yes; Sir.

(*b*) Orders have since been issued in the matter. The Union has been informed that as the recommendations of the Wage Board for Sugar Industry are to be implemented in this factory, the issues need not be referred for adjudication.

SRI V. K. KOTHANDARAMAN : இப்பொழுது அங்குள்ள தொழிலாளர்களுக்கும் நிர்வாகத்தினருக்கும் உள்ள உறவு கெட்டிருக்கிறது என்பது உண்மையா ? அது சம்பந்தமாக சர்க்கார் என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறார்கள் ?

THE HON. SRI R. VENKATARAMAN : இந்த ஆலையில் ஒரு நிரந்தரத் தொந்தரவு இருக்கிறதாக நான் நினைக்கிறேன். இந்தக் கேள்வி போடுகிறபோது என்ன தொல்லை அங்கு இருந்ததோ